97.

REG. NO. M. 2997.

தனிப்பிரதி அணா 1

RÉPUBLIQUE FRANÇAISE

LIBERTÉ.—ÉGALITÉ.—FRATERNITÉ.

ஆசிரியர் :
யாழ்ப்பாணம்
தென்கோவை.
ச. கந்தைய பிள்ளை
தமிழ்ப் பண்டிதர்,
சிலோன்.




LE RÉDACTEUR
TENKOVAI
S. CANDIAH PILLAI.
Tamil Pandit
Jaffna
CEYLON.

# VITTAGAM

JOURNAL HEBDOMADAIRE PARAISSANT LE JEUDI

# வித்தகம்

வியாழக்கிழமை தோறும் வெளிவருவது

Bureau de la Direction :—
RUE D'AMBALATADOU AYER
MADAM, NO. 2,
Pondichery.

நத்தம்போற் கேடு முளதாகுஞ் சாக்காடும்
வித்தகர்க் கல்லா லரிது.
குறள்.

காரியாலயம் :—
அம்பலத்தாடு ஐயர் மடத்து வீதி,
நெம்பர் 2,
புதுவை.

VOL. II. புதுவை, பவ ௵ மாசி ௴ ௰௨ (21—2—35) NO. 13.

## திருமந்திரம்.

திருவடி வைத்தேன் சிரத்தரு ளேக்கிப்
பெருவடி வைத்தந்த பேர்நந்தி தன்னைக்
குருவடி விற்கண்ட கோனையெங் கோவைக்
கருவழி வாற்றிடக் கண்டுகோண் டேனே.

வைத்தே னடிக்கண் மனத்தினுள் ளேநான்
பொய்த்தே யெரியும் புலன்வழி போகாம
லெய்த்தே னுழலு மிருவினை மாற்றிட்டு
மெய்த்தே னறிந்தேனவ் வேதத்தி னந்தமே.

அடிசார லாமண்ணல் பாத மிரண்டு
முடிசார வைத்தனர் முன்னை முனிவர்
படிசார்ந்த வின்பப் பழவடி வெள்ளக்
குடிசார் நெறிகூடி நிற்பவர் கோள்கையே.

காம்பு திறந்தன வோன்பது வாய்தலு
மாம்பற் குழலியின் கஞ்சுளி பட்டது
வேம்பேறி நோக்கினன் மீகாமன் கூரையிற்
கூம்பேறிக் கோயிலிற் பூக்கின்ற வாறே.

ஆவிக் கமலத்தி னப்புறத் தின்புற
மேவித் திரியும் விரிசடை நந்தியைக்
கூவிக் கருதிக் கொடுபோய்ச் சிவத்திடைத்
தாவிக்கு மந்திரந் தாமறி யாரே.

கால்கோண்டேன் சென்னியிற் கட்டறக் கட்டற
மால்கோண்ட நெஞ்சின் மயக்கிற் றயக்கறப்
பால்கோண்ட வென்னைப் பரன்கொள்ள நாடினன்
மேல்கோண்டேன் செம்மை விளம்ப வொண்ணதே.

உ
திருவருள் துணை.




காலமுண் டாகவே காதல்செய்
துய்மின் கருதரிய
ஞாலமுண் டானொடு நான்முகன்
வானவர் நண்ணரிய
ஆலமுண் டானெங்கள் பாண்டிப்
பிரான்றன் அடியவர்க்கு
மூலபண் டாரம் வழங்குகின்
றான்வந்து முந்துமினே.

[திருவாசகம்]

# வித்தகம்

புதுவை,
பவ ௵ மாசி ௴ 10 உ

## விட்ட குறை.

பத்திரகிரியார்
மெய்ஞ்ஞானப் புலம்பல்.

தேங்காக்கருணைவெள்ளந் தேக்கியிருந்
[துண்பதற்கு
வாங்காமல்விட்டகுறை வந்தடுப்பதெக்
[காலம்.

(ஷை செ. 4)

என அருளிச்செய்தார் நித்தியத்துவம் பெற்ற தத்துவப் பெரியாராகிய பத்திரகிரியார். இதனால் அருள் வெள்ளத்தில் திளைப்பதற்கு விட்ட குறை வந்து அடுக்கவேண்டும் எனவும், அது வந்து அடுப்பது எக்காலம் எனவும் இரங்குகின்றார். விட்ட குறை என்றால் என்னை? எனின், அது தான் பூர்வ சென்மத்தில் செய்து போந்த வினைக்குறை என்று கூறப்படும். மனிதர் எனப்படுவோர்க்கு இது மறை பொருள்—மறை பொருளாய் இருப்பது — மறையாய் இருப்பது என்க. முன் இருப்பு—குறை—விட்டகுறை இன்னது என அறிந்த போதன்றோ அதனைத் தொட்டுப் பூர்த்தி செய்ய முடியும்? பண்டுளது இன்னதெனக் கண்டு அதற்கு ஏற்பப் புதுவினை புரிந்து சமஞ் செய்ய வேண்டும் என்றே வேதம் முறையிடுகின்றது. இதனை அறிவது மாகடினம். மருளுடம்புடைய சீவராகிய நாம் இதனை அறிதல் முடியாத காரியம். உலகியலுக்கு ஏற்ற குரவராகிய எம்போலிய சீவரும் இதனை அறிந்து உணர்த்த வல்லரல்லர். மற்றே, சர்வஞ்ஞத்துவமுடைய எல்லாம் வல்ல சித்தனாகிய சற்குருநாதனே இதனை அறிந்து, ஏற்றவாறு புதுவினை புரிந்து இருவினையைச் சமம் செய்யும்படி உபதேசிக்க வல்லனவன். விட்ட குறையைத் தொட்டு நடாத்திப் பூர்த்தி செய்தலாகிய தொண்டு புரிவதற்கும் உரிய காலம் வர வேண்டும்.

பலகோடி சென்ம நற்றவப் பயனால் ஆசான் தரிசனம் பெறும் பக்குவம் வாய்ந்தவன் அவ் ஆசான் அடியில் தன் உடல் பொருள் ஆவிகளை அர்ப்பணஞ் செய்து அவன் கருணையால் உரைக்கும் வேதாகம கட்டங்களைத் தாங்கி ஒழுகுவதில் திவலையேனும் வழுவுதல் கூடாது. ஆசானால் அருளப்படும் வேதாகம கட்டங்கள் எல்லாம் பூர்வத்தைத் தொட்டு நடாத்தி இருவினையைச் சமம் செய்தற்கு ஏற்றனவாயே அமையும். இருவினை சமம் பெறாதபோது இறைவன் அருளைப் பெறமுடியுமா? முடியாது. விட்ட குறையைத் தொட்டு நடாத்திப் பூர்த்திசெய்து அஃதாவது கர்மத்தால் கர்மத்தை க்ஷயம் செய்து —தீவினை நிறையைக் குறுக்கி அதனை நல்வினை நிறைக்கு ஒப்பக் காண வேண்டும். கண்டபோது தான் இருவினை சமம் பெறுதலாகிய இருவினை ஒப்பும் மல பரிபாகமும் உளவாகும். இவ்வாறன்றி, சீவர்கள் தங்கள் முனைப்பால் கண்டு பிடிக்கும் சில நடை நொடிகளால் இருவினை ஒப்பும் மல பரிபாகமும் உளவாகும் என்பது முயற்கொம்பேயாகும். இருவினை ஒப்பு மல பரிபாகம் என்பனவற்றை எளிதில் அடைந்து விடலாம் எனக் கருதுவது அறிவிலார் மாண்பு. இருவினை ஒப்பு மல பரிபாகம் அமையப் பெறுவது தான் அமல முதற்படி எனப்படும்—முத்திவாயில் எனப்படும். இதுவே புகலிடம் என அறிதல் வேண்டும். இவ்விடத்திற்றான் இறைவன் அருளைப் பெறமுடியும். இப்பெற்றி கைகூடப் பெறாது அகலிடத்தே நின்று நீலிக் கண்ணீர் வடித்து அப்பனே! அரசே! எனக் கூவிக் குழறுவதால் அருளைப் பெறமுடியாது.

திருவாசகம்.

“..............................
அருளார் பெறுவார் அகலிடத்தே அந்தோ
[அந்தோ அந்தோவே.”

(ஷை யாத்திரைப் பத்து செ. 10)

என அருளியது மாணிக்கம். அகலிடம் என்றால் என்னை? அது தான் இருவினை சமம் பெறாத—மல பரிபாகம் பெறாத மருளுடம்பு என்க. இருவினை ஒப்பு மல பரிபாகம் வாய்க்கப்பெற்ற விமல தநுவே — விதேகமே புகலிடம் என அறிதல் வேண்டும். ஆசான் உரை வழி நின்று விட்ட குறையைத் தொட்டு நடாத்திப் பூர்த்தி செய்து இருவினை சமமுறப் பெற்று மல பரிபாகம் வாய்ந்த இப் புகலிடத்திற்றான் இறைவன் கருணையைப் பெற்று அக் கருணை வெள்ளத்தில் திளைக்க முடியும். இது பற்றியே,

பத்திரகிரியார்
மெய்ஞ்ஞானப் புலம்பல்.

தேங்காக்கருணை வெள்ளந் தேக்கியிருந்
[துண்பதற்கு
வாங்காமல்விட்டகுறை வந்தடுப்பதெக்
[காலம்.

(ஷை செ. 4)

என ஒன்றும் போதா அறிவிலிகளாகிய எம்போலியர்க்கு உண்மையை அறிவுறுத்தினர் பத்திரகிரியார் என அறிதற்பாற்று. ஆதலால் முன்னிலைக் கோரணிகளால் வரும் நன்மை தீமைகளைப் பொருட்படுத்தாது, ஆசான் அருளியவாறு — தொட்டுக் காட்டியபடி பணி செய்து கிடக்க வேண்டும். கர்மத்தால் கர்மத்தை க்ஷயம் செய்து —மதி வினையாகிய புதுவினையால் தீவினை நிறையைக் குறுக்கி அதனை நல்வினை நிறைக்கு ஒப்பக் காணல் வேண்டும். பல சென்மங்களில் ஒருவன் இயற்றிய வினையை அவனே அநுபவிக்க வேண்டும். ஆதலால் விளைத்தவனும் அவனே, விளைத்ததை அறுத்து உண்ண வேண்டியவனும் அவனே என்பது வெள்ளிடை ஆம். இதனை மறுத்துக் கூறுவார் உளர் எனின், அஃதாவது நாம் ஒன்றையும் அநுபவிக்காமலே ஆசான் கணப்பொழுதில் யாவற்றையும் எரித்துச் சாம்பலாக்கிவிடுவான்—நாம் கஷ்டப் படாமலே நமக்கு இருவினை ஒப்பு மல பரிபாகம் வந்துவிடும் என்பார் உளர் எனின், அவர் ஒரு சிறிதாவது அறிவு விளக்கம் இல்லாத முட்டை மதியினரன்றி வேறோ? விளைத்ததின் பயன் தீதாயிருக்கின்றமையால் அது அநுபவத்துக்கு வராதென்று மறுத்துழி, அது நம்மை விடுமா? அநுபவம் ஒழிந்தாலன்றி அது மாய இடமுண்டோ? இல்லை. இல்லை. எனினும் புது வினை என்னும் மதி வைராக்கியம் உடையவரால் அவ்வினைப் பயன் மறுக்கப்படாதோ? என்பது கடா. படும்; படாது என்பதே அதற்கு உத்தரமாகும். முத்தி நெறிக்கெனச் சமைந்து ஆசான் உரை வழி வழுவாது ஒழுகுவோர்க்குச் சஞ்சிதம் என்னும் பையில் கட்டுண்டு கிடக்கும் வினைவித்துக்கள் கால கதியில் விளைந்து பலன் கொடுக்கப் போந்துழி, பெரும் துன்பமாகவும் தூலமாகவும் அநுபவிக்க வேண்டிய பலன் சூக்குமமாகவும் சிறிது துன்ப நிறை உடையதாகவும் திரிதலடைந்து பிறர் அறியா வண்ணம் அநுபவமாய்ப் போந்து மாய்ந்திடும். மறுக்கப்படும் என்பதன் பொருள் இதுவே என்க. வேறு சில வித்துக்களின் பலன் பெரும் நிறை பெற்று விளங்குமாயின் அதனை ஒருவாறு அநுபவித்தே தீரவேண்டும். மறுக்கப்படாது என்பதன் பொருள் இதுவே என்க. இன்னும் சில வித்துக்கள் விளைவேறியும் விளைவேறும் பக்குவமுடையனவாகியும் விளங்கும். அவை அனைத்தும் ஆசானால் அருளப்படும் நிறை என்னும் கோலால் (நிறை முறை தழுவி ஒழுகுதல்—ஒப்புரவொழுகுதலாகிய உபாயத்தால்) தகிக்கப்பட்டு அநுபவமாகாது கழிந்திடும். உண்மை இவ்வாறு ஆதலால், வினை ரூபங்களாகிய முன்னிலைகளை வெறுத்தலும் அவற்றிற்கு அஞ்சுதலும் இன்றி, தற்சுதந்திரத்தை ஆசானிடம் ஒப்புவித்துப் பணி செய்துகிடத்தலே செயற்பாலது என்க. ஆசானிடம் தற்சுதந்திரத்தை அர்ப்பணம் செய்வது எற்றிற்கு? ஊதியம் ஏதும் அறியாத பரம கருணை நிதியாகிய ஆசான் தற்சுதந்திரத்தைத் தன்னிடம் ஒப்புவிக்க வேண்டும் எனக் கூறியருளுவது எற்றிற்கு? யார் சுகமடைவதற்காக இவ்வாறு பணிக்கின்றான்? ஆழ்ந்து நோக்குமிடத்து, முத்தி நிலையை அபேட்சிப்போர் சுகப்படுதற்பொருட்டே பரம கருணை நிதியாகிய ஆசான் அவர் பண்டு புரிந்த வினையை திரோபவமாக அவருக்கு ஊட்டி அநுபவிக்கச் செய்கின்றான் என்பது வெள்ளிடையாம். இவ் அநுபவம் முடிந்ததும் அவன் வழங்கும் கருணையின் பெட்பு யாரால் அளவிட முடியும்? "தேங்காக்கருணை வெள்ளம் தேக்கி இருந்து உண்பது" சத்தியமல்லவா? மெய்யடியார் எல்லாம் ஆசான் அருளால் விட்ட குறையைத் தொட்டுப் பணிசெய்து உய்தி அடைந்தவரேயாவர். விட்ட குறைக்கு ஏற்பத் தொட்டு நடாத்தும் பணிகளும் சீவர்கள் சடபேதம் கர்மபேதங்களுக்கு ஏற்றவாறு வெவ்வேறாய் அளப்பிலவாகும். இவற்றை அறிந்து ஏற்ற ஏற்றவாறு விதிகளை அருள வல்லவன் சர்வஞ்ஞனாகிய சற்குருநாதனே என்பது சொல்லாதே அமையும்.

இவ்வாறு விட்ட குறையைத் தொட்டு நடாத்திக் கர்மத்தால் கர்மத்தை ஒழிப்பதே "முன்னை வினையின் முடிச்சை அவிழ்ப்ப" தாகும். அஞ்ஞான்று தற்சுதந்திரத்தை ஆசான் திருவடியில் அர்ப்பணம் செய்து பணி செய்து கிடத்தலே "பின்னை வினையைப் பிடித்துப் பிசைதல்" ஆகும் — ஆகாமியம் என்னும் மேல்வினையை ஆக்கமுறச் செய்யாது திருவருள் நாட்டத்தோடு வாளாங்கு வதிதலாகும். "சும்மா இருத்தல்" என்னும் பெரியார் மறையின் செம்பொருள் இதுவே என்க.

## திருமந்திரம்.

தன்னை யறிந்திடுந் தத்துவ ஞானிகள்
முன்னை வினையின் முடிச்சை யவிழ்ப்பர்கள்
பின்னை வினையைப் பிடித்துப் பிசைவர்கள்
சென்னியில் வைத்த சிவனருளாலே.

(ஷை 8–தந் ஞானிசெயல் செ. 2)

இவ்வாறு விட்ட குறையைத் தொட்டுப் பூர்த்தி செய்தலின் பயன் இருவினை ஒப்பும் மல பரிபாகமும் சத்திநிபாதமும் வாய்ந்து தேங்காக் கருணை வெள்ளம் தேக்கி இருந்து உண்டு ஞான சத்திவடிவாய் அமிர்தத்துவம் (மரண மற்ற நிலை) என்னும் நித்தியத்துவம் பெறுதலே ஆம்.

இதுகாறும் கூறியவைகளால் ஆசான் அருளால் விட்ட குறையைத் தொட்டுப் பூர்த்தி செய்தலே நித்தியத்துவ நெறி என்பது ஒருவாறு உணரத்தகும்.

சுபம்.



## அறிவிப்பு

கடிதர்களின் அபிப்பிராயங்களுக்கு அவர்களே பொறுப்பாளிகள்.

# உண்மை முத்திநிலை ஆராய்ச்சி மறுப்பு.

"வித்தக"ப் பத்திராசிரியர் எழுதியது.

(தொகுதி 2. 12-ம் வாரத் தொடர்ச்சி.)

உண்மை என்னும் சத்தியமே மறை. அஃது உலக மாக்களுக்கு என்றும் மறை பொருளே யாம். மறையே வேதம். வேதமே அமல ஐகார ஒலி. வேதம் மறை பொருளாய் இருத்தல் போலவே உண்மை நிட்டையாகிய சகச நிட்டையும் உலக மாக்களுக்கு என்றும் மறை பொருளே ஆம். வேதம் முதலியன எல்லாம் வாய்மையில் அரிய பெரிய தத்துவங்களேயாகும். மெய்யடியாரே இவற்றை அநுபவமாக அறிய வல்லுநர். சவிகற்ப நிர்விகற்ப நிட்டையாளர்க்கும் வித்துவப் பெரியார்க்கும் இவை முயற்கொம்பேயாகும். இத் தத்துவங்கள் யாவற்றையும் அநுபவமாக அறியும் மெய்யடியாரே தத்துவப்பெரியார் எனப் போற்றப்படுதற்கு அருகராவர். சவிகற்ப நிர்விகற்ப நிட்டைகளாகிய உபாசக நிட்டையையே உண்மை நிட்டை எனவும் ஞான நிட்டை எனவும் மயங்குவர் உலகோர். இவ் இருவகை நிட்டையாகிய உபாசக நிட்டையால் பிரமை அடையும் உலகினர்க்கு உண்மை நிட்டையாகிய சகச நிட்டையின் இலக்கணத்தை ஒருவர் உரைத்தால் அவர் மதி அதனைப் பற்றுதல் முடியாத காரியம். பெரிய மேதாவிகள் எனப் புகழப்பட்டவரே சகச நிட்டையை அறிய முடியாது மாண்டு போயினர் என்றால் உலக மாக்கள் அதனை அறிய முடியாமையும் வியப்பாகுமா? நாதங்களாகிய வேதங்களும் ஆக்க முற்றுப் பிருதிவி அம்சமாகிய அமல உடலில் ஒடுங்கிய போதுதான் பூரணமான சகச நிட்டை கைகூடும். இவ் உண்மையை மணிவாசகர் அருளிச்செய்த திருவாசகத்துத் திருப்படையாட்சி என்னும் திருப்பதிகத்தால் நன்று வலியுறுத்தப் பட்டது. மணிவாசகர் திருப்படையாட்சி 4வது செய்யுளில்.

"நண்மணி நாத முழங்கி என் உள்ளுற நண்ணுவ தாகாதே;"

என்று கூறியருளி,

"என்னை யுடைப்பெரு மானரு ளீசன் எழுந்தரு ளப்பெறிலே"

என்று முடித்தருளினார்.

ஷை 6வது செய்யுளில்,

"வீணை முரன்றெழு மோசையி லின்ப மிகுத்திடு மாகாதே"

என்று கூறியருளி,

"என்னைமுனாளுடையீசனெனத்தன்எழுந்தருளப்பெறிலே."

என்று முடித்தருளினார்.

ஷை 7வது செய்யுளில்,

"சொல்லிய லாதெழு தூமணி யோசை சுவை தருமாகாதே"

என்று கூறியருளி,

"இந்து சிகாமணி எங்களை ஆள எழுந்தருளப் பெறிலே"

என்று முடித்தருளினார்.

ஷை 8வது செய்யுளில்,

"சங்கு திரண்டு முரன்றெழு மோசை தழைப்பன ஆகாதே"

என்று கூறியருளி,

"ஈறறி யாமறை யோனெனை யாள எழுந்தரு ளப்பெறிலே."

என்று முடித்தருளினார். ஆசான் வெளிப்பட்டுச் சீடனுக்கு மல பரிபாகம் உண்டாக்கி அவனுட் புகுந்து அவனுக்குள் எதிர்ப்பட்டு எதிர்ப்பட்ட போது அவனே தானாய் தான் அவனாய் எழுந்தருளுகின்றான் என முறையே "வெளிப்படுமாயிடிலே" "என்னுள் புகுந்திடிலே" "எதிர்ப்படுமாயிடிலே" "எழுந்தருளப்பெறிலே" எனக் கூறியருளியதும் உய்த்துணர்தற்பாலது சீவன். முத்தர்க்கு உரிய பூரணமான சகச நிட்டையின் இலக்கணம் திருப்படை ஆட்சியில் நன்று விளக்கப்பட்டமை அப் பதிகப் பொருளை நுண்ணுணர்வால் கண்டு தெளிவார்க்கு எளிதில் புலப்படாததாகாது. இவ் அரிய பெரிய நிலைக்கும் சவிகற்ப நிர்விகற்ப நிட்டையாளர் நிலைக்கும் உள்ள இடையீடு இவ்வளவினது என இயம்ப ஒண்ணாதது. இவ் உண்மைகளை அறியும் ஆற்றலும் காதலும் இல்லாத சாத்திர நிபுணர் பிணமாக விழுதற்குரிய மருளுடம்பினர்களாகிய சீவர்களையே சிவன் முத்தர் எனத் தமது போலிச் சாத்திர வாயிலாக உறுதிப் பண்ணி விட்டுத் தாமும் சீவத்துவம் நீங்கப் பெறும் வழியறியாது — மாற்றிப் பிறக்கும் வழி யறியாது இறந்து பிறவி வலைப்படுவாராயினர்.

எம்பெருமான் வெளிப்படுதல்— தம்முள்ளே குரு தரிசனம் பெறுதல் என்றால், முன்னிலைகளை நிறை கண்டு பஞ்சீகரணித்துப் பௌதிகத் தூய்மை அடையும் பெற்றி கைவரப் பெறாது வாயோடு கண் மூடி மயக்கமுற்று ஓராங்கு வீற்றிருக்கும் சவிகற்ப நிர்விற்ப நிட்டையாளராகிய உபாசக நிட்டையாளர்க்கு முடியாத காரியமேயாகும். உலகர் போல் வாழ்ந்து ஒப்புர ஒழுகுதலால் — நிறை முறையான அருந்தல் பொருந்தல்களால் பஞ்ச பௌதிக தநு நிறையோடு பஞ்சீகரணிக்கப்பட்டு விமலம்

பெறவேண்டும். அப்பொழுது தான் ஆரூர்ப் பங்கஜதள மத்தியில் — இருதய புண்டரீகம் என்னும் தகரா காசத்தில் நடனமிடும் அப்பன் திருவடித் தாமரை காணப்படும் என்ப. இப் பங்கஜதள மத்தியில் வீற்று ஆடரவு என்னும் குண்டலியை அடக்கி அதனை ஆபரணமாகப் பூண்டு ஆடுவன் பெருந்துறையான் (பெருந்துறை — அகண்ட வெளி; பிரபஞ்சக் கூட்டம் அற்ற இடம்) திருவடித்தாமரையே நமது சரீரமாகிய ஆலயத்துள் மறைந்திருக்கும் —மறையாயிருக்கும் வேதம் — அமல ஐகார ஒலி என்க. திருவடித் தாமரையே— மறையாய் இருக்கும் திருவடியே ஓவாது ஒலித்துக் கொண்டிருப்பது— அசையாமல் அசைந்து கொண்டிருப்பது— நிறையோடு அசைவது— நடனம் புரிவது என்க.ஒலி ஒளி நடனம் என்பன ஒன்றே. சத்துச் சித்தாய் பெண்ணும் ஆணுமாய் இவ்விரண்டும் (உடலுயிர்) கூடிக் குழையும் காலத்து உண்டாகும் அசைவாய் இவ் அசைவு என்னும் ஆண்ஒலி பெண் ஒலி சேர்ந்த அலி ஒலியாய் அர்த்தநார ஒலியாய் விளங்குவது அப்பன் திருவடிக் கமலம் என்க. இத்தகைய திருவடியைக் காண்பது என்றால் சவிகற்ப நிர்விகற்ப நிட்டைகளால்—உபாசக நிட்டையால் முடியாது. அருந்தல் பொருந்தல்களாகிய உரிய சாதகங்களாற்றான் சரீர பாவனை ஒழிந்து — தற்சுதந்திரம் ஒழிந்து பெருந்துறைத் தரிசனம் பெறவேண்டும். குரு அருளால் உலகர்போல் வாழ்ந்து ஒப்புர வொழுகுதலால் மாற்றிப் பிறக்கும் வகை அறியாது உபாசக நிட்டையே உண்மை நிட்டையாகிய இயற்கை நிட்டை என நம்பி அமைவோரும், கற்பனையாகிய மாயா சொரூபங்களையே நாமரூபங்களையே உண்மை என நம்பி அமைவோரும் சரீரம் பிணமாகி விழ இறந்து பிறவி வலைப்படுவதே யன்றி, பெருந்துறை கண்டு நித்தியத்துவம் பெறுதல் முடியாத காரியமே. பெருந்துறை கண்டு கோகழியாகிய சமுத்திரத்தை நீந்தி அதன் மத்தியில் உள்ள திருவடி காண்பது—குருதரிசனம் பெறுவது (குருந்தம்—குருவின் இடம் அடைவது) எளிதன்று. கழியை நீந்துவது என்றால் எளிதாகுமோ? கோகழியின் கரையாகிய வரையைக் காண்பதே அரிதினும் அரிதாம். திருவாசகம் திருவண்டப்பகுதி அகவலில்,

"திருவார் பெருந்துறை வரையில் ஏறி"

என வரை கண்டு வரையில் ஏறியமை கூறப்பட்டது. வரை கண்டு வரையில் ஏறியவன் படும்பாடு என்னென்று உரைக்கப்படும். ஐம்பூதப் பிரளயத்தால் இவன் படும்பாடு அளவு படுவதாகுமா? ஐம்பூதப் பிரளயம் என்றால் என்னை? அது தான் சரீரத்தில் உள்ள பஞ்ச பௌதிகங்களும் ஒன்றாகிச் சேர்ந்து விடுதல் — குழைதல் என்பது. நினைக்கவும் சொல்லவும் படமுடியாத துன்பங்களைப் பிறர் அறிந்து ஐயமும் அடையாதவாறு அநுபவிக்கும் இவன்,

"செஞ்சுடர் வெள்ளம் திசைதிசை தெவிட்ட வரையுற"

என் செய்வான்? எவர் அறிவர்? எம்பெருமான் கருணை நோக்கு இல்வழி இவன் பணி செய்து கிடக்கும் திறனுடையன் ஆவனோ? அப்பால் நிகழ்வது யாது? எனின், அது பின் வரும் அகவல் அடிகளை நோக்கி அறிதற்பாலது:

"ஐம்புலப் பந்தனை வாளர விரிய
வெந்துயர்க் கோடை மாத்தலை கரப்ப
நீடெழிற் றோன்றி வாளொளி மிளிர
எந்தம் பிறவியிற் கோப மிகுத்து
முரசெறிந்து மாப்பெருங் கருணையின் முழங்கி"

ஐம்புலப் பந்தனை வாளரவு — அசுத்த ஐம்பூதக் கலப்பாநய வினைப்போக தேகம் — அசுத்த நிறை அமைந்த மருளுடம்பு — "கள்ளப் புலக்குரம்பைக் கட்டு" என்க. வாளரவு என்றார் சீறிக் கொத்தும் நாகமாகிய வாசி என்னும் வாசுகி ஆதலின். இரிதல் — அசுத்த பௌதிக நிறை அணு அணுவாக மாற்றமடைதல் — விமலமடைதல். "வேந்துயர்க் கோடை மாத்தலை கரப்ப என்பதனால் துன்பம் களையப்படுதல் கூறப்பட்டது. "நீடு எழில் தோன்றி வாள் ஒளி மிளிர" என்பது ஞானவாள் ஏந்துதலை உணர்த்தி நின்றது. "செம்பொன் உலக்கை வலக்கைபற்றி" (திருவாசகம் திருப்பொற்சுண்ணம் செ. 9) என்பதும் இப்பொருட்டே யாகும். இங்கே கூறப்பட்ட முரசே "பெருந்துறைக்கோன் முன்பால் முழங்கு முரசு" (திருவாசகம், திருச்சதகம் செ. 8) அப்பன் திருக்கருணை இதுவே. சாமகானம் — அருளமுதம் இதுவே என்க.

"கேதக் குட்டம் கையற ஓங்கி
ஊழ் ஊழ் ஓங்கிய நங்கள்
இருவினை மாமரம் வேர்ப றித்தெழுந்து"

இவ்விடத்தன்றோ (கேதக்குட்டம் கையறுதல்—துன்பம் களையப்படுதல்) இருவினையும் சமரசப்பட்டன; பட்டு வேறாகத்திரிந்தன. இருவினை சொரூபமான மல பௌதிக தநுவாகிய அசுத்த மா மரமானது விமல மா மரம் எனத் திரிந்து பூத்தது என்க. மா எனப் பூத்தது என்பார் பெரியார். இருவினை சொரூபமாகிய உடலுயிர் இயக்கங்கள் சமரசப்பட்டு வேறாகத்திரிந்தன — ஊன் உயிர் வேறு செய்யப்பட்டன — மாற்றமடைந்தன என்க.

## திருவாசகம்.

"உருவ அருள்நீர் ஓட்டா வருவரைச்
சந்தின் வான்சிறை கட்டி மட்டவிழ்
வெறிமலர்க் குளவாய் கோலி நிறையகின்
மாப்புகைக் கரைசேர் வண்டுடைக் குளத்தின்

மீக்கொள மேன்மேன் மகிழ்தலி னேக்கி
அருச்சனை வயலுள் அன்புவித் திட்டுத்
தொண்ட வுழவ ராரத் தந்த
அண்டத் தரும்பெறன் மேகன் வாழ்க."

(ஷை திருவண்டப்பகுதி)

என்பனவற்றோடு,

## திருமந்திரம்.

வண்ணா னெலிக்குஞ் சதுரப் பலகைமேற்
கண்ணாறு மோழை படாமற் கரைகட்டி
விண்ணாறு பாய்ச்சிக் குளத்தை நிரப்பினால்
அண்ணாந்து பார்க்க அழுக்கற்ற வாறே.

(ஷை 3ம் தந். 10வது கேசரியோகம் செ. 2)

என்னும் திருமூலர் திருவாக்கை ஒப்பு நோக்கி உண்மை கண்டு கொள்க.

அருளை மழை என்ப. ஆதலின் அஃது "அருள் நீர்" எனப்பட்டது. "அருவரைச் சந்தின் வான்சிறை கட்டி மட்டவிழ் வெறிமலர்க் குளவாய் கோலி" என்பது "என்பர மல்லா இன்அருள்" எனப்பட்ட ஆதி அருளானது பூமணம் போலும் சிவமணம் கமழும் விமல தனுவுள் அமைந்து அளவோடு திகழ்தலை—பெற வேண்டிய நிறை பெறுதலை உணர்த்தி நின்றது. அருச்சனை வயல்—ஐந்தெழுத் தருச்சனை முறைப்படி சொல்லப்பட்ட உடலம். அவ் அருச்சனை தான் முன்னிலைகளை நிறைகண்டு பஞ்சீகரணித்து அசுத்த நிறையைக் கேடடையச் செய்தலும் அமல நிறையை ஆக்கமுறச் செய்தலுமாகிய ஈவும் ஏற்பும் எனப்படும்; பழையன கழிதலும் புதியன புகுதலும் ஆம் என்க. அருச்சனை வயலுள் அன்பு எனும் வித்துப் பெருக்கமடைந்து விளைவேறி அவ் அன்பு எனும் அப்பு உப்பானால்—உப்பு எனும் சிவமானால் அதுவே அருளாகும். "அருள் என்னும் அன்பீன் குழவி" (குறள்) எனத் தேவர் கூறியதும் அறிக. இவ் அருள் என்னும் குழவி பொருள் என்னும் செல்வச் செவிலியால் வளர்க்கப்படும். அப்பொருள் தான் பொன் எனப்படுவது—தாது எனப்படுவது. இதுவே "ஓஜஸ்" ஆதல் வேண்டும். ஓஜஸ் என்றால் ஒவடிவின் பிறப்பிடம் என்பர். இதுவே ஆசான்; இதுவே அமுதம்; சரீரத்தில் உறைந்து அமுதமாவது. பிரணவ அமுதம் இதுவே என்க. இதனைக் கண்டு உண்டால் இவ் அருவமான இயக்கம் என்னும் சூக்கும கற்பமாகிய ஒலி—ஒலிமயமான அருட்குருவான சூக்கும வடிவம் (ஓவடிவம்) என்னும் ஆசான் கட்புலனுக்கு உருவாய்ப் பரிசத்துக்கு அருவாய்த் தோன்றும்படி பொருள் என்னும் செவிலித் தாயால் வளர்க்கப்பட்டு உருப்பெறுகின்றான்—சூக்கும உருப்பெறுகின்றான் என அறிதல் வேண்டும். "அருள் என்னும் அன்பீன் குழவி பொருளென்னும் செல்வச் செவிலியா லுண்டு" என்னும் தேவர் திருவாக்கின் உண்மைப் பொருள் இதுவே என்க. இத்தகைய அன்பினலாய அருளமுதம் உண்டு உய்தியடையச் செய்தலையே "அருச்சனை வயலுள் அன்புவித் திட்டுத் தொண்ட உழவர் ஆரத்தந்த அண்டத்து அரும் பெறன் மேகன் வாழ்க" என்பதனால் புலப்படவைத்தனர் எமது மணிவாசகப் பிரபு என அறிதற்பாற்று. உடயிலுரில் உள்ள அழுக்காகிய அசுத்தம் நீங்கிய இடத்துத்தான் இருவினை சொரூபமாகிய அவ்வுடல் உயிர்கள் சமரசப்பட்டு வேறுகத் திரிந்தன ஆகும்.

"ஊசலாட்டும்இவ்உடலுயிராயினஇருவினைஅறுத்து........
ஒளியாக்கி.................................................

(திருவாசகம், அற்புதப்பத்து செ. 8)

எனவும்,

"......ஊன்உயிர்வேறுசொய்தான்......"

(சுந்தரர் தேவாரம், திருநொடித்தான்மலை செ. 1.)

எனவும் வரூஉம் வேத வாக்குக்களின் உண்மைப் பொருளையும் நோக்குக. எவ்வாறு திரிந்தன என்னில், பின் வரும் திருவாக்குக்களால் அவ்வுண்மை அறிதற்பாலது.

## திருவாசகம்.

"பூவில் நாற்றம் போன்றுயர்ந் தெங்கும்
ஒழிவற நிறைந்து மேவிய பெருமை
இன்றெனக் கெளிவந் தருளி
அழிதரும் ஆக்கை யொழியச் செய்த ஒண்பொருள்
இன்றெனக் கெளிவந் திருந்தனன் போற்றி
அளிதரும் ஆக்கை செய்தோன் போற்றி"

(ஷை திருவண்டப்பகுதி)

"பூவில் நாற்றம் போன்றுயர்ந்து" என்பது பூமணம் போலும் சிவமணம் கமழப் பெற்ற உண்மையை உணர்த்திற்று. கல் பூத்தமையால் பூ மணம் போலும் சிவமணம் கமழ்ந்தது—"மணங்கமழ் தெய்வத்து இள நலம்" திகழ்ந்தது என்க. அழிதரும் ஆக்கை = இருவினை சொரூபமாகிய—பிராரத்த தநுவாகிய மருளுடம்பு. பிணி மூப்புச் சாக்காடுகளுக்குரிய இவ் அழிதரும் ஆக்கையே அப் பிணி மூப்புச் சாக்காடுகள் நீங்கி நித்தியத்துவம் பெறுதற்குரிய அளிதரும் ஆக்கையாக—விமல தேகமாக—விதேகமாக—ரக்ஷக தேகமாக மாற்றமடைந்தது—திரிந்தது என்க. இவ்வாறு திரிதலே மல பரிபாகம் என அறிதற்பாற்று. மல பரிபாகம் பெற்ற போது தன்னிலை முன்னிலை எங்கணும் நறுமணமே—சிவமணமே கமழும் என்க. அளிதரும் ஆக்கையாகிய விமல காயப் பண்பு இதுவே யாம். இவ்வுண்மையையே பின் வரும் பட்டினத்தடிகள் திருவாக்கும் நன்று வலியுறுத்துகின்றது.

## பட்டினத்தார் புலம்பல்.

"ஆர்ந்தவிடமத்தனையும்அருளாயிருக்குதடி
சார்ந்தவிடமெல்லாஞ்சிவ்வாதுமணக்குதடி."
"பொற்பூவும்வாசனைபோற்போதம்பிறந்தார்க்கு
கற்பூவும்வாசனைபோற்காணக்கயவருக்கு."

(தொடரும்.)

## * ஸர். ஜகதீச சந்திர வஸு அவர்கள் செய்த பிரசங்கம். *

(தொகுதி 2. 12-ம் வாரத் தொடர்ச்சி.)

### தன்னியக்கம்.

செடிகொடிகளின் ஆராய்சித் துறையில் திகைப்பை யுண்டு செய்யும் விஷயம் ஒன்றுளது. அதவாது, தனக்குத்தானே சுயமாகவே உற்பத்தியாகுந் தன்மை அல்லது தன்னியக்கமென்னும் குணாதிசயத்தின் ஸூக்ஷ்மம். உதாரணமாக இருதயம் தனக்குத்தானே அடித்துக் கொள்கிறதாகக் காணப்படுகிறது. யுக்தி யோசனைகளும் வரப் பிரஸாதமும் தாமாகவே மூளைப்பதாகத் தோற்றுகின்றன. அதிகாடாந்தகாரப் பிரதேசமான இந்த விஷயமாக செடிகொடிகளிடம் செய்த பரீக்ஷைகள் மூலமாய் நமக்கு உண்மை உதயமாகிறது. செடி கொடிகளின் தன்னியக்கமான நாடியோட்டத்தைக் கண்டறிய முடிந்தது; அவற்றின் உற்பத்தி சரித்திரத்தையும் அறிந்து கொண்டோம். உண்மையை உள்ளவாறு கூறுங்கால் எதுவும் தன்னால் தானே இயங்குவது அதாவது சுயமாகவே உதிப்பது, மூளைப்பது என்பதே கிடையாதென்னும் விஷயம் ஆராய்ச்சிகள் மூலமாய்த் தெளிவாகிறது. ஆனால் உயிருள்ள வஸ்துவானது வெளியுலகிலுள்ள சக்திகளை ஆகரிஷித்து அவ்வாறு கிரஹிக்கப்பட்ட சக்தியை மெள்ள மெள்ள தன்னுட்புறத்நில்மறை சக்தியாக சேமித்து வைத்துக் கொள்ளும் ஆற்றலை யுடையது என்பது ருசுவாகிறது. இந்தச் சேமதனமாகிய சக்தியே சிறிது சிறிதாக வெளிக்கு வந்து தன்னியக்கம் போல் தோன்றுகிறது. கேவலம் ஜடயந்த்ரத்தின் சலனம் தொடங்கி படபடவென்று பூர்ண ஊக்கத்துடன் இயங்கும் நாடித் துடிப்பு மூலமாய் தமக்குத் தாமே உற்பத்தியாகும் எண்ணங்கள் யோசனைகள் வரை பல்வேறு விசித்திர இயக்கத்தயுடைய இந்த ஜீவ யந்திரத்தைப் பல சிக்கல்களுடைய அதன் அதிசய வேலைப் பாட்டுத்திறம் குன்றாமல் உழைத்து வரும்படிச் செய்தற்குக் கேவலம் நமது மனிதன் கைச் செயற்கை யந்திரத்துக் குரிய ஆற்றலை காட்டினும் மேன்மையான ஆற்றல் அதனிடம் பொருந்தியிருத்தல் வேண்டும். ஓர் ஜீவ அங்கத்தை அதன் அக்கம் பக்கத்து நண்பர்களிடமிருந்து அப்புறப் படுத்தி வைத்தோமானால் அதனுடைய இயற்கையான தொழிலும் ஊக்கமும் சீக்கிரத்தில் நாசமுறுகின்றன. அதனைப் பூரண பிராணனுடனும் விளங்கும் ஊக்கத்துடனும் ஜீவித்திருக்கும்படி செய்தற்குப் புறத்திலிருந்து சக்தி சதா அதனுக்குள் பாய்ந்து கொண்டிருத்தல் அவசியம். ஆதலால் அஜ்ஜீவனானது சதா சர்வ காலமும் தன்னைச் சுற்றி நிற்கும் சகல விதமான பிரபஞ்ச சக்திகளுடன் கூடிக் குலாவி உறவாடிக் கொண்டிருத்தல் இன்றியமையாததாகும். உண்மை இவ்வாறாயின், முற்றிலும் என்னுடையதென நான் சொல்லிக் கொள்ளக் கூடிய வஸ்து ஒன்றாவதுளதோ? நாம் முற்றிலும் ஒருவரை யொருவர் அனுஸரித்தும், பண்டைக்காலத்து யுக்தி யோசனைகள், எண்ணங்கள், நினைவுகள் அவர்களுடைய அறிவு, வித்தை முதலியவற்றை அநுசரித்தும் நிற்பவர்களன்றோ? நான் என்னும் பிறர் அணுகுதலில்லாத சிறிய கோட்டையைக் கட்டிக்கொண்டு அதனுள்ளேயே அடைபட்டு நிற்கும் நிலை எவ்வளவு கஷ்டமான நிலையாகும்! என்ன பரிதாபகரமான வாழ்க்கை! அத்தகையது மனிதனுடைய வாழ்க்கை! ஆதலால்! நான் என்னும் தனி வீட்டில் தன்னந் தனியனாய் நிற்கும் வாழ்க்கையை விட்டுவிட்டுப் ‘நாம்’ என்னும் நல்லரணில் கூடி வாழ்ந்து அயலாருக்கு நஷ்டத்தையுங் கஷ்டத்தையுங் கொடுத்தே கிடைக்கக்கூடிய எதையும் லாபமெனக் கருதும் அந்த அஞ்ஞான நள்ளிருளை வேரோடு களைந்து எறிவோமாக! ஏனெனில் ஒருவருடனொருவர் போட்டி போட்டுப் பொருதிக் கொண்டு இருக்கும் வாழ்வைவிட ஒருவருக்கு ஒருவர் உதவி புரிந்து ஒற்றுமையும் கூட்டுறவும் ஒத்துழைப்பும் பொருந்தியவர்களாகி வாழ்தல் எவ்வளவு பயனுற்றதாகும். எத்தகைய சுகத்தைப் பயக்கக் கூடும்!

### பல்வேறு அங்கங்கள் ஒத்தியங்கும் பேருடல்.

சமூகத்தாருக்கும் தேசத்தினுக்கும் பொது நன்மையைப் பயத்தற்காகத் தத்தம் பிரத்தியேகத் தொழில்களைச் செய்து அவரவர் கடமைகளை நிறைவேற்றுவதை இயங்கும் பல மனிதர்கள் அல்லது ஜீவன்கள் சேர்ந்திருக்கும் ஓர் ராஜ்யத்துக்கு ஒப்பிடலாம் ஒரு விருக்ஷத்தின் வாழ்க்கைச் சரித்திரத்தை. விருக்ஷமானது தனது தேகத்துக்குப் புஷ்டியை ஊட்டும் உரத்தைப் பூமியினின்று பெறுகின்றது. அக்கம் பக்கத்தில் உண்டாகும், எண்ணிறந்த அதிர்ச்சிகளானவை விருக்ஷங்களுக்கு அடிக்கடி உண்டாகும் சோம்பேறித்தனம், சுணங்காலாதி செயலற்று நிற்கும் மாரக நிலையினின்றும் அவ் விருக்ஷங்களை மீட்டு அவற்றை அதிரச்செய்து ஊக்கத்தை ஊட்டிவருகின்றன. க்ஷேத்ரத்தானும் அதனை யநுஸரித்த சம்பந்தங்களானும் ஏற்படும் பரமோத்தம நன் கொடையாகும் ஜீவனுடைய மலர்ச்சி எத்தனையோ ஆபத்தான இடுக்கண்கள்

மரத்துக்கு ஏற்படுகின்றன; ஆனால் அவ்வித இடையூறுகளால் விருக்ஷமானது நசித்து விடுவதில்லை; இடுக்கண்களை நாசஹேதுவாகக் கொள்ளாமல் அவற்றை உற்ற துணையாக மாற்றிக்கொண்டு அவற்றின் சகாயத்தால் நூதனமான சக்திகளையெல்லாம் பெறுகின்றன. செத்துப் போனதும் சாவது மாகிய பயனற்ற அங்கங்களையும் அழுக்குகளையும் தொலைத்து, கால தேச வர்த்தமானங்கள் மாறமாற மாறிய நிலைக்கேற்ப அதற்கு அநுகூலமான புதிய சக்திகளை விருத்தி செய்து கொள்ளுகின்றன.

சீராக இணைக்கப்பட்ட தொரு யந்திரம்.

விருக்ஷமானது ஒன்றுக் கொன்று பொருந்துத லில்லாத பரஸ்பர சம்பந்தமில்லாத, கேவலம் நெல்லிக்காய் மூட்டையைப் போன்றதன்று. சீராக ஒன்றுடனொன்று பொருத்தமுற இணைக்கப்பட்ட ஏகிபவித்த பொருளாகும். நமது பூமண்டலத்தில் எங்கேயோ ஒதுக்கப்பட்ட கோடியிலோ மூலையிலோ ஏற்படும் (பூமி) அதிர்ச்சியானது இதர பாகங்களையும் பாதித்து அவைகளுக்குப் புதிய உருவத்தையும் அமைப்பையும் அளித்து விடுகிறது. விருக்ஷத்தின் வாழ்விலும், உள்ளே உயிருடன் இயங்கும் பற்பல ஜீவ அணுக்களுக்கு ஊக்கமூட்டும் படியான வெளிப்புறத்துள்ள தூண்டுதல் சக்திகள் யாவும் உட் செல்லுவதற்கு இயைந்த மார்க்கங்கள் இருத்தல் அவசியம். அவ்விதம் புறத்துச் சக்தி அகத்துள் நுழைந்து தூண்டுதலில்லையென்றால் அந்த ஜீவ அணுக்கள் இயங்குதலின்றி மரணமடையும். நிரம்பவும் வித்தியாசப்படும். அங்கங்களுக்கிடை பரஸ்பரம் பொருத்தமும் பரஸ்பரம் அடங்கி நடக்கும் குணமும் இருத்தலும் இன்றியமையாதது.

(தொடரும்.)

## மதிப்புரை.

---

### யுவவருஷ வாக்கிய பஞ்சாங்கம்

---

யாழ்ப்பாணம் கொக்குவில் சோதிட பரிபாலன மடம் இரகுநாதையர் அவர்கள் தத்தபுத்திரர் ப்ரமஸ்ரீ. சிவராமலிங்க ஐயர் அவர்களாலும் அவர்கள் பௌத்திரர் ப்ரமஸ்ரீ. பஞ்சாட்சர ஐயர் அவர்களாலும் கணித்து வெளியிடப் பட்ட யுவ வருஷ வாக்கிய பஞ்சாங்கப் பிரதி ஒன்று வரப்பெற்றோம். இதில் வாரம் முதலிய பஞ்சாங்க விபரமும், யுவ வருஷ சுபாசுப பலன்களும், சோதிடர் உதவி இல்லாமலே பலரும் அறிந்து கொள்ளக் கூடிய பிறபல விஷயங்களும் விளக்கமாகக் கூறப்பட்டுள்ளன. இரகுநாதையர் பஞ்சாங்க மாண்பும் பழைமையும் தமிழுலகம் நன்று அறிந்தனவே யாதலால் யாம் விரிவுற விளம்புதல் மிகையாகும். இதன் விலை அணா நான்கு. யாழ்ப்பாணம் கொக்குவில் சோதிட பரி பாலன மடத்தாரிடம் பெறற்பாலது. பிரதி ஒன்று எமது பார்வைக்கு அனுப்பிய ஷெ மடத்தாருக்கு எமது வந்தனம் உரியதாகுக.

(ப—ர்)

---



